REGD. No. TN-MS (C) 244 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 * 4 பக்கம் விலை 30 காசு




# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்




மலர்: 2 (★) சென்னை 5—10—1978 வியாழன் (❋) (★) (❋) (★) வெளியூர் 6—10—1978 வெள்ளி (❋) இதழ்: 343





கழகக்காளை சுகுமாரனும், அவர் தந்தையும் கொலை செய்யப்பட்டு விழ்ந்து கிடக்கும் பயங்கரக காட்சி.

## பூலாவரி சுகுமாரனை கொலை செய்ய

# ரகசிய சதி ஆலோசனை

## வீரபாண்டி ஆறுமுகம் போட்ட திட்டம்: பாங்கு சூப்பிரண்டு சாட்சி

**சேலம், அக். 5- கழக அடலேறு பூலாவரி சுகுமாரனை கொல்ல வீரபாண்டி ஆறுமுகம் ரகசியமாகப பேசிக் கொண்டிருந்ததாக கூட்டுறவு வங்கி சூப்பிரண்டு சாட்சியம் அளித்தார்.**

பூலாவரி சுகுமாரன், அவரது தந்தை ஆகியோர் துப்பாக்கியால் சுட்டு கொல்லப்பட்டதைத் தொடர்ந்து வீரபாண்டி ஆறுமுகம் உள்பட 13 பேர் மீது கிருஷ்ணகிரி தனி கோர்ட்டில் விசாரணை நடந்துவருவது தெரிந்ததே.

சேலம் மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கித் தலைவராக வீரபாண்டி ஆறுமுகம் இருந்தார்.

அந்த வங்கியில் குமாஸ்தாவாக வேலை பார்க்கும் பெருமாள் என்பவர் ஏற்கனவே சாட்சியம் அளித்தார்.

அவரை அடுத்து அந்த வங்கியின் சூப்பிரண்டு சோமசுந்தரம் சாட்சி சொன்னார்.

அவர் கூறியதாவது:

12-6-76 மாலையில் கூட்டுறவு வங்கி தலைவ ஆறுமுகத்தின் அறைக்குப் போனேன்.

அங்கு குப்புசாமி, கணேசன் மற்றும் சிலர் பேசிக் கொண்டிருந்தனர்.

உள்ளே போக முயன்றபோது வெளியே நின்றிருந்த ராஜன் என்னை தடுத்தார்.

தலைவர் ரகசியமாகப் பேசிக் கொண்டிருப்பதாகவும் இந்த சமயத்தில் வேறுவெளியாட்கள்யாரும் போகக்கூடாது என்றும் பியூன் தடுத்தார்.

அப்பனையும் மகனையும் வெறிநாய்களை சுட்டுக் கொல்லுவதைப் போல சுட்டுக்கொல்ல வேண்டும்" என்று ஆறுமுகம் கூறியதைக்கேட்டேன்.

இவ்வாறு சோமசுந்தரம் கூறினார்.

### நேரில் பார்த்தவர்

பூவாவரி சுகுமாரன் கொலை செய்யப்பட்டதை நேரில் பார்த்ததாகக் கூறப்படும் அரும்பாயி அம்மாள் இன்று சாட்சியம் அளித்தார்.

அப்ரூவர்கள் பழனிசச்ாமி கோவிந்தசாமி, சந்தானம் ஆகியோரிடம் ஒப்புதல் வாக்குமூலம் வாங்கியது பற்றி ராசிபுரத்தில் ஜுடிசியல் செகண்ட் கிளாஸ் மாஜிஸ்திரேட்டாக இருந்த திருநாவுக்கரசு. சேலம் தலைமை ஜுடிசியல்மாஜிஸ்திரேட்டாக இருந்த ராமசாமி ஆகியோர் சாட்சியமளித்தனர்.

அரசு தரப்பில் வழக்கறிஞர்கள் சேலம் எஸ், கண்ணன், சின்னராஜூ பால சுப்பிரமணியம் ஆகியோர் ஆஜரானார்கள்.

## கடைசிசெய்தி

### 4 நாட்களுக்கு முன்னும் சதித் திட்டம்

கிருஷ்ணகிரி, அக். 5- பூலாவரி சுகுமாரன் கொலைவழக்கில் இன்று சாட்சியம் அளித்த சேலம் மத்திய கூட்டுறவு வங்கி குமாஸ்தா ரங்கநாதன் சாட்சியம் அளிக்கையில் கொலை நடப்பதற்கு 4 நாட்களுக்கு முன்பும் வீரபாண்டி ஆறுமுகம் சதித்திட்டம் தீட்டியதாக சொன்னார்.

ஆறுமுகம் அறைக்குள் தான் சென்றபோது "சுகுமாரனும் அவனது தகப்பனும் 24ந்தேதிகோர்ட்டுச்கு வருகிறார்கள். அப்போது 2 பேரையும் சுட்டுத் தள்ளுங்கடா" என்று ஆறுமுகம் கூறியதாக ரங்கநாதன் இன்றைய சாட்சியத்தில் தெரிவித்தார்.

### இடை தேர்தலில் போட்டியிடுவது பற்றி இந்திரா

பம்பாய், அக். 5- கருநாடக மாநிலம் சிக்மகளூர் இடைத் தேர்தலில் இந்திரா போட்டியிட வேட்புமனுச் செய்யச் செல்கிறார். டெல்லியிலிருந்து சிக்மகளூர் செல்லும் வழியில் பம்பாயில் நிருபர்களுக்கு அவர் பேட்டி அளிக்கையில் "சிக்மகளூர் இடைத் தேர்தலில் போட்டியிட கட்சியின் நலமே என்னைக் கட்டாயப் படுத்திற்று" என்றார்.

ஓட்டல் அதிபர்களுக்கு கோரிக்கை:

# உணவுப் பண்டங்களின் விலையைக் குறைக்க வேண்டும்

அமைச்சர் எட்மண்ட் பேச்சு

**சென்னை, அக் 5-அரிசி, சர்க்கரை, எண்ணெய், பருப்பு வகைகள் ஆகியவற்றின் விலைகள் கணிசமான அளவு குறைந்திருக்கிறது. இந்த நிலையில் ஓட்டல் உரிமையாளர் உணவுப் பண்டங்களின் விலைகளைக் குறைக்க வேண்டும் என்று அமைச்சர் எட்மண்ட் கூறினார்.**

சென்னை மற்றும் தமிழ் நாடு ஓட்டல்கள் சங்க மாநாடு நேற்று மைலாப்பூரில் நடைபெற்றது.

இதற்கு தமிழக உணவு அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட் தலைமை வகித்து பேசுகையில் கூறியதாவது:

நாட்டிற்கு உணவு விடுதி எவ்வளவு முக்கிய தேவை என்பது பற்றி யாருக்கும் எந்தவித சந்தேகமும் தேவையில்லை.

கிராமங்களிலானாலும் சரி நகரங்களில் ஆனாலும் சரி-உணவு விடுதிகள் எந்த அளவுக்கு சிறப்பாக பணியாற்றுகிறதோ அந்த அளவுக்கு மக்களிடம்பாராட்டு பெறும் என்பதில் எந்த விதத்திலும்சந்தேகமில்லை.

ஒரு தொழிலை நடத்துவதே நாம் சம்பாதிக்க வேண்டும் என்பதற்காகத் தானே தவிர- நட்டம் ஏற்பட வேண்டும் என்பதற்காக அல்ல.

உணவு விடுதிகளின் தரத்தை தப் பிரிக்கவேண்டும். இதற்கு ஓட்டல் உரிமையாளர்கள் கூட இன்ன இன்ன தரமாகபிரிக்கலாம் என்றால் அது ஏற்றதாக இருக்கும்.



### 14 ஆயிரம் உணவு விடுதிகள்

தமிழ்நாட்டில் உள்ள 14 ஆயிரம் உணவு விடுதிகளுக்கும் தேவையான உணவுப் பொருள்களை உணவுப் பங்கீட்டுக் கழகம் மூலம் அளிப்பது என்பது இயலாத காரியம். இதனால் அரசுக்கு பெரிய அளவு சிரமம் ஏற்படும்.

அதனால் ஓட்டல் சங்கக் காரர்களே உணவுப் பொருள்களை உற்பத்தியாகும் இடங்களிலேயே கொள்முதல் செய்து பகிர்ந்து கொள்ளலாம். அதன் பலன் மக்களுக்கும் பயன்படும்.

உணவுப் பண்டங்களின் விலைகளை குறைக்க வேண்டும் என்று பொதுமக்கள் கேட்கிறார்கள். அரசியல் கட்சிக்காரர்கள் கேட்கிறார்கள். பத்திரிகைகளில் செய்தி வருகின்றன.

அரிசி, எண்ணெய், சர்க்கரை, பருப்பு வகைகள் ஆகியவற்றின் விலைகள் கணிசமான அளவு குறைந்திருக்கிறது. ஓட்டல்களில் உணவுப் பண்டங்களின் விலைகள் குறைய வேண்டும் என்ற கருத்தை ஏற்றுக் கொள்ளும் அளவிற்கு சூழ்நிலைகள் இருக்கின்றன.

தரமான (ஸ்டார்) ஓட்டல்கள் இட்லி, தோசை ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் விற்பதைப் பற்றி கவலை இல்லை.

ஆனால் சாதாரண-நடுத்தர மக்கள் உபயோகப் படுத்தும் உணவு விடுதிகளில் உணவுப் பண்டங்களின் விலைகள் குறைய வேண்டும்.

இதற்கு ஓட்டல்களின் தரம் பிரிக்கப்பட்டு, தரத்திற்கு ஏற்ப ஆகும் உற்பத்திச் செலவுக்கு ஏற்ப விலைகளை நிர்ணயிக்க வேண்டும்.

இதற்கு ஓட்டல் உரிமையாளர்கள் அவர்களாகவே கூடிப்பேசிஉணவுப் பண்டங்களின் விலைகளைக் குறைக்க வேண்டும்.

விலைகள் குறைப்பு என்ற பெயரில்அரசு நடவடிக்கை எடுப்பதின் மூலம் ஓட்டல் உரிமையாளர்களுக்கு தொல்லை கொடுப்பதை இந்த அரசு விரும்பவில்லை.

இங்கே பேசிய சங்கத் தலைவரும் மற்றவர்களும் விலைவாசிகள் உயர்ந்து விட்டது என்றோ குறைந்து விட்டது என்றோ குறிப்பிடவில்லை. அந்தச் சூழ்நிலை இன்றைக்கு தமிழகத்திலே இல்லை,

நல்ல காபி கிலோ 12 ரூபாய்க்கு கிடைக்கிறது. அதே போல சாக்கரை வெளிச்சந்தையிலே முன்பு கண்ட்ரோல் விலையில் விற்கப் பட்ட விலையில் விற்கிறது. பாலைப் பொறுத்த வரை

(2-ம் பக்கம் பார்க்க)

### கருணாநிதி கோர்ட்டுக்கு வருவார்?

கிருஷ்ணகிரி, அக். 5- கழக அடலேறு பூலாவரி சுகுமாரன், அவரது தந்தை ஆகியோர் துப்பாக்கியால் சுட்டுக் கொல்லப்பட்டது சம்பந்தமாக தி. மு. க. எம். எல். சி. வீரபாண்டி ஆறுமுகம் உட்பட 13 பேர் மீது கிருஷ்ணகிரி தனி கோர்ட்டில் வழக்கு விசாரணை நடந்து வருகிறது.

கிருஷ்ணகிரி நகருக்கு ஆறுமுகத்தின் கையாட்கள் ஏராளமான பேர் வரவழைக்கப் பட்டுள்ளனர். பத்துப் பன்னிரண்டு கார்களில் அவர்கள் சுற்றிக்கொண்டே இருக்கிறார்கள்.

கிருஷ்ணகிரியிலுள்ள பல ஓட்டல்களில் அந்த கோஷ்டி தங்கி இருக்கிறது. இதற்காக ஏகப்பட்ட பணம் வெள்ளமாகச் செலவிடப்படுகிறது.

சென்னை, சேலம்போன்ற இடங்களிலிருந்து நாற்பது

(2ம் பக்கம் பார்க்க)



## அறிவிப்பு

தவிர்க்கமுடியாத காரணங்களால் நேற்றைய (சென்னை 4-10-78 வெளியூர் 5-10-78) "அண்ணா" நாளிதழ் வெளிவரவில்லை. விற்பனையாளர்கள், வாசகர்கள், ஆதரவாளர்கள் பொறுத்தருள வேண்டுகிறோம்.

நிர்வாகி
"அண்ணா"

# அமைச்சர் எட்மண்ட் பேச்சு... (முதல் பக்கத் தொடர்ச்சி)

தண்ணீர் கலந்து காய்ச்சி தான் கொடுக்கிறீர்கள். காபி விலை குறைந்ததா என்றால் இல்லை.

இதை எல்லாம் ஏன் குறிப்பிடுகிறேன் என்றால் நீங்களாகவே விலைகளைக் குறைக்க முயற்சி செய்ய வேண்டும் என்பதற்காகத் தான் சொல்லுகிறேன்.

இதற்கு தேவையான நடவடிக்கை எடுத்து நீங்கள் அரசுடன் ஒத்துழைப்பீர்கள் என்று நம்புகிறேன் அது நாட்டு மக்களுக்கும் நன்மை பயப்பதாக இருக்கும்.''

இவ்வாறு அமைச்சர் எட்மண்ட் பேசினார்.

## க. ராஜாராம்

தமிழக அரசின் டெல்லி சிறப்புப்பிரதிநிதி க.ராஜாராம் இந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பேசுகையில் கூறியதாவது:-

'' 1937ம் ஆண்டில் மதுவிலக்கு அமலுக்கு வந்த பிறகுதான் ஓட்டல்கள் அதிகரிக்கத் தொடங்கின.

இப்பொழுது எல்லா ஜாதிக்காரர்களும் ஓட்டல் நடத்துகிறார்கள். எந்த ஜாதிக்காரர் சமையல் செய்கிறார். எந்த ஜாதிக்காரர் பரிமாறுகிறார் என்றும் தெரிவதில்லை. வித்தியாசம் தெரியாத அளவுக்கு இந்தத் தொழிலில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது.

நடுத்தர மக்களிடத்தில் மாலை வேலைகளில் சிற்றுண்டி சாப்பிடவேண்டும் என்ற பழக்கம் ஏற்பட்டு விட்டது. சேலத்தில்2 லட்சம் நெசவாளர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மாலையில் காப்பி சாப்பிடுவதுடன் சாப்பிடுவது என்பதுஅவர்களிடையேபழக்கமாகி விட்டது.

பல லட்சம் பேருக்கு வேலைவாய்ப்புஇத்தொழில் மூலம் கிடைக்கிறது. ஆனால் அந்தத் தொழிலாளர்களுக்கு நிரந்தரமான வேலை இல்லை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

## பாதுகாப்பு நிதி

உங்களுக்குள்ளேயே ஒரு நிதி வசதி ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அதன் மூலம் நிதியைப் பெற்று உங்கள் வளர்ச்சிக்கு பயன்படுத்த முடியும். அந்த நிதி வசதியில் உங்களுக்கு பாதுகாப்பு நிதியைக் கூட சேமித்து வைக்கலாம்.

விற்பனை வரியை நீக்க வேண்டும் என்று இங்கே கோரிக்கை விடுத்திருக்கிறீர்கள். வளர்ந்து வரும் இந்த நாகரீக காலத்தில் விற்பனை வரியை நீக்கிவிட்டால் அரசாங்கத்தை நடத்துவது எப்படி?

சினிமா அதிபர்கள் ஒட்டு மொத்த வரி முறையைதெரிவித்தார்கள் அதை இன்றைக்கு நிறைவேற்றி இருக்கிறார்கள். அதைப்போல நீங்கள் ஒரு யோசனையைதெரிவித்தால் அதை நிறைவேற்றுவதற்கு நானும் ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறேன்.

அதன் மூலம் நீங்களும் சினிமா அதிபர்களைப்போல விற்பனைவரி அதிகாரிகளின் தொல்லை இல்லாமல் பெருமூச்சு விடாமல் இருக்க முடியும்.

இந்தத் தொழிலுக்கு விளம்பரம் பிரச்சாரம் முக்கியம். ஒரு ஓட்டலில் உணவுப் பண்டங்கள் நல்லதாக இருக்கிறது என்று சாப்பிடுகிறவர்கள் மற்றவர்களிடம்சொன்னால்பிரச்சாரம். விளம்பரம் செய்தால் தான் உங்களுக்கு நல்ல முறையில் வியாபாரம் பெருகும். இவ்வாறு க. ராஜாராம் பேசினார்.

ஓட்டல்கள் சங்கத் தலைவா புருஷோத்தமன் அனைவரையும் வரவேற்றுப்பேசினார். கே. தாமோதரசாமி நாயுடு, சுந்தரம் ஆகியோர் பேசினார்கள். பாலகிருஷ்ணன் நன்றி கூறினார்.

# அடியார் நிகழ்ச்சி

அக் 8. சென்னை, 9 திருச்சி, 10, 11 மதுரை, 12, 13 திண்டுக்கல் 14 சேலம், 15 சேலம் (லைன்மேடு)

# நிதியமைச்சர் நாஞ்சிலார் டெல்லிபயணம்

சென்னை, அக். 5- தமிழக நிதியமைச்சர் நாஞ்சிலார் நேற்று (புதன்கிழமை) காலை விமானம் மூலம் டெல்லிக்குச் சென்றுள்ளார்.

டெல்லியில் இம்மாதம் 5, 6, 7 தேதிகளில் நடைபெறும் தேசிய அபிவிருத்திக் கவுன்சில் துணைக் குழு கூட்டங்களில் அவர் கலந்து கொள்கிறார்.

டெல்லியில் நாஞ்சிலார் பிரதமர்தேசாய்உள்ளிட்ட மத்திய தலைவர்களைச் சந்தித்து பல்வேறு விஷயங்கள் குறித்து பேச்சுக்கள் நடத்துகிறார்.

தேசிய அபிவிருத்திக் கவுன்சில் துணைக்குழுக் கூட்டங்களுக்குப் பிறகு நாஞ்சிலார் இம்மாதம் 8 ஆம் தேதி சென்னை வந்து சேருகிறார்.

# கோவை மாவட்ட மகளிர் அமைப்பு கூட்டம்: பி. டி. எஸ். அறிவிப்பு

கோவை மாவட்ட மகளிர் அமைப்புக் கூட்டம் 7-10-78 அன்று காலை 8 மணிக்கு கோவை நகர சுற்றுலா விடுதியில் நடைபெறும்.

மகளிர் அமைப்புகுறித்து பல்வேறு முக்கிய பிரச்சினைகள் குறித்தும் ஆலோசனை நடத்த இருப்பதால் நாடாளுமன்ற சட்டமன்றத் தொகுதி அமைப்பாளர்களும் பெருந்திரளாக கலந்து கொள்ள வேண்டுகிறேன்.

பி. டி. சரஸ்வதி
மகளிர் பிரிவு செயலாளர்

# கருணாநிதி கோர்ட்டுக்கு.. (1-ம் பக்கத் தொடர்ச்சி)

வழக்கறிஞர்களும் வரவழைக்கப்பட்டுள்ளனர்.

ஆறுமுகம் தம்பி குப்புசாமியை இந்த வழக்கிலிருந்து விடுதலை செய்யுமாறு தன்னிடம் கருணாநிதி கூறியதாக முன்னாள் ஐ. ஜி. அருள் சாட்சியம் அளித்திருந்தார்.

ஆறுமுகம் தம்பியை விட்டு விடுங்கள். வேறு யாரை வேண்டுமானாலும் வழக்கில் சேர்த்துக் கொள்ளுங்கள் என்று முதலமைச்சராக இருந்த கருணாநிதி தன்னிடம் கூறியதாக போலீஸ் அதிகாரிரமணன்சாட்சியம் அளித்திருந்தார்.

விதிகளுக்கும் மரபுகளுக்கும் மாறாக, முதல்வராக இருந்த கருணாநிதிதன்னைஅழைத்து பேசியதாகவும் போலீஸ் அதிகாரி ரமணன் சாட்சி சொன்னார்.

2 தடவை தன்னை கோபாலபுரம் வீட்டுக்கு அழைத்து கருணாநிதி சந்தித்ததாகவும அவர் கூறினார்.

எனவே இதுபற்றி தனக்குத் தெரிந்தவற்றைக் கூற கருணாநிதி கிருஷ்ணகிரி தனி கோர்ட்டுக்கு வருவார் என்று கருதப்படுகிறது.

அமைச்சர் ராகவானந்தம் அறிவிப்பு

# குடிசை வாழ்வோர் 3 ஆயிரம்பேருக்கு வீட்டுமனைப்பட்டா

சென்னை, அக். 5- குடிசை வாழ்வோர் 3580பேருக்கு வீட்டு மனைப்பட்டா வழங்கப்படும் என்று அமைச்சர் ராகவானந்தம் கூறினார்.

குடிசை மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் அரசு செய்து வரும் பணிகள் குறித்து அமைச்சர் ராகவானந்தம் தெரிவித்ததாவது:

உலக வங்கி உதவியைக் கொண்டு குடிசை மேம்பாட்டுத்திட்டங்கள்செயல் படுத்தப்பட்டு வருகின்றன. அதன்படி சாலைவசதிகள் பள்ளிக்கூடம் மின் விளக்குகள், பாதாளச் சாக்கடை, கழிவறை ஆகிய வசதிகள் செய்து தரப்படும்.

## ரூ.1 கோடி ஒதுக்கீடு

இந்தத் திட்டத்தின் கீழ் வீட்டுமனைப்பட்டா வழங்கப் படுகிறது. வீடு கட்டுவதற்கு ஸ்டேட் பாங்கு கடன் உதவி செய்கிறது. வீட்டு வடிவமைப்பு முதலியவற்றை சென்னை பெருநகர் வளர்ச்சிக்குழுமம் ஏற்பாடு செய்து தருகிறது.

1977-78ஆம் ஆண்டில் 19 குடிசைப் பகுதிகள் குடிசை மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் எடுத்துக் கொள்ளப்பட்டன. இதற்காக ரூ. 1 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இதுவரை ரூ. 28 லட்சம் செலவழிக்கப்பட்டுள்ளது.

இதன்படி சீரணிபுரம், தர்மபுரம், சோமசுந்தர பாரதி நகர், நடுவக்கரை எம். ஜி. ஆர். காலனி, நடுவக்கரை பிள்ளையார் கோவில் தெரு, மங்கம்மாள்தோட்டம், சிவகாமி அம்மையார் நகர், கீரைத் தோட்டம், ம.வ. நாராயணசாமி நகர், திருவள்ளுவர் நகர், நேருநகர், ராமதாஸ் நகர், காமராஜ் நகர், கஸ்தூரிபாய் நகர், காமராஜபுரம், சீனிவாசா நகர், திருமூலர் காலனி ஆகிய பல குடிசைப் பகுதிகள் பயன்பெறுகின்றன.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் கூறினார்.

குடிசை மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் செயல்பட்டு வரும் பல்வேறுபகுதிகளுக்குச்சென்று அமைச்சர் பார்வையிட்டார்.

தெரு விளக்குகள் இருந்தும் சரிவர எரிவது இல்லை என்று சிலர் முறையிட்டனர். உடனே சம்பந்தப்பட்ட அதிகாரிகளுடன் தொடர்பு கொண்டு கலந்து பேசி 3 நாட்களுக்குள் விளக்கு எரியும் என்று அறிவித்தார்.

1967 ஆம் ஆண்டில் குடிசைப் பகுதிகளில் தீப்பிடித்த போது அதற்கு மாற்றாகக்கட்டப்பட்ட வீடுகளில்மேற்கூரை தாழ்வாக இருப்பதாகவும், ஒரே ஒரு அறைதான் இருப்பதாகவும் குளிப்பதற்கும், கழிப்பிடத்திற்கும்வசதிகள் இல்லை என்றும் பெரம்பூர் கஸ்தூரிபாய் காலனியில் வாழ்வோர் கூறினர்.

''உங்களுக்கு குடிசை மாற்றுவாரிய மாடி வீடு வேண்டுமாஅல்லதுகுடிசை மேம்பாட்டுத் திட்டத்தை சேர்ந்த சொந்த வீடு வேண்டுமா என்பதை முடிவு செய்து அதிகாரிகளுக்குத் தெரிவியுங்கள். குடிசை மாற்று வாரிய வீடு வேண்டுமானால் இந்த இடத்தைக் காலி செய்து விட்டு அருகில் உள்ள இடத்தில் தங்கி இருங்கள். அப்போது அந்த இடைக்காலத்துக்கு மட்டும் ரூ 50 கிரயமாக ஒரு குடும்பத்துக்குக் கொடுக்கிறோம்.

குடிசை மேம்பாட்டுத் திட்டத்தின்கீழ்வீடுவேண்டுமானால் 400 சதுர அடிக்கு உங்களுக்கு பட்டா வழங்கப்படும். வீடு கட்டிக் கொள்வதற்கு ஸ்டேட் பாங்கி கடன் கொடுக்கும் படி கேட்டுக் கொண்டிருக்கிறோம், மாதம்ரூ 8 வீதம் 8 ஆண்டுகளில் கடனைக் கொடுத்து விடலாம், எது உங்களுக்குத்தேவை என்பதை முடிவு செய்து தெரிவியுங்கள்.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் கூறினார்.





# ஜனதா மேலிட கூட்டத்தில் செருப்பைக்காட்டி ஆவேசப்பேச்சு

புதுடெல்லி, அக். 5- ஜனதாக்கட்சி மேலிடக் கூட்டத்தில் செருப்பை எடுத்து வைத்து ஆவேசமாகப் பேசினார் ஒரு உறுப்பினர்.

ஜனதா எம்.பி.க்களின் 3 நாள் கூட்டம் நேற்று தொடங்கியது. பிரதமர் மொரார்ஜிதேசாய் தலைமை வகித்தார். பிரதமரோ, அவரது அமைச்சரவை சகாக்களோ நேற்றைய கூட்டத்தில் பேசவில்லை.

25 உறுப்பினர்கள் பேசினார்கள். ஆட்சியில் கட்டுப்பாடின்மை வளர்வதாகவும் சரண்சிங், ராஜ்நாராயணன் போன்றவர்கள்கட்சிக்கட்டுப்பாட்டை மீறிப் போவதாகவும் பலர் குற்றம் சாட்டினர்.

பிரகாஷ் பேசும்போது "கட்சிக்கு ராஜ்நாரயணன் தேவையா கட்டுப்பாடு தேவையா என்பதை முடிவு எடுக்க வேண்டும். தேசியத் தலைவரான சரண்சிங்கை ராஜ்நாராயணன் போன்றவர்கள் ஒரு வகுப்பினரின் தலைவராகக் குறைத்து விட்டார்கள்'' என்றார்.

சரண்சிங் இடைமறித்து ''வீணான விவாதம் வேண்டாம். இப்படியே பேசிக் கொண்டு போனால் முடிவு இருக்காது. என் பெயரை எதிலும் இழுக்காதீர்கள்'' என்றார்.

ஒரு கட்டத்தில் ராஜ் நாராயணன் பேசியதை ஆதரித்து மணிராம் பக்ரி பேசும்போது ''வாக்குறுதிகளை அரசு நிறைவேற்றுவிட்டால்மக்கள்செருப்பை எடுக்க ஆரம்பித்துவிடுவார்கள்'' என்றார். உடனே அரிஜன உறுப்பினரான மோகன்லால் பீபல் எழுந்து தனது செருப்பைக் கையில் எடுத்து அசைத்துக் கொண்டிருந்தார். கட்சி விவாதத்தை மணிராம்பக்ரி இந்த அளவுக்கு கீழ்மட்டத்துக்கு கொண்டுபோய் இருக்கக் கூடாது என்று கூறி அவர் செருப்பைக் கீழே போட்டார்.









தங்கமணி பப்ளிகேஷனுக்காக275, அவ்வை சண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை-600004.
ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

அமைச்சர் காளிமுத்து முன்னிலையில்

# "சமதர்ம சமுதாயம் அமைப்போம்": மாணவர்கள் உறுதி

மதுரை, அக்.5—ஏற்றத்தாழ்வு அற்ற சமுதாயத்தை தந்தை பெரியார் வழிநின்று உருவாக்கப் பாடுபடுவோம் என்று அமைச்சர் காளிமுத்து முன்னிலையில் மாணவர்கள் உறுதி மொழி எடுத்தனர்.

மதுரை வெற்றி தனிப் பயிற்சிக் கல்லூரி சார்பாக தந்தை பெரியார் நூற்றாண்டு விழா தமுக்கம் கலையரங்கில் கொண்டாடப்பட்டது.

மதுரை காமராஜர் பல்கலைக்கழக துணைவேந்தர் டாக்டர் வி. சி. குழந்தைசாமி தலைமை தாங்கினார்.

பேராசிரியர் எம். எஸ். நாடார் வரவேற்றார்.

உள்ளாட்சித் துறை அமைச்சர் காளிமுத்து சிறப்புரை ஆற்றினார்.

அமைச்சருக்கும், துணைவேந்தருக்கும் வெற்றி தனிப்பயிற்சிக் கல்லூரி முதல்வர் ஆர். ஜெகதீசன் பொன்னாடை போர்த்தினார்.

விழாவில் அமைச்சர் காளிமுத்து பேசியதாவது:

தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவை அரசு கொண்டாடிக் கொண்டு இருக்கிறது.

ஈரோட்டில் அரசு நடத்திய பெரியார் விழா—கொள்கை வழி நின்று கொண்டாடிய விழாவாக அமைந்திருந்தது.

முதன்முதலாக நம் விழிகளைத் திறந்து விட்ட தந்தை பெரியார் பெயரை ஒரு மாவட்டத்துக்கு சூட்டிய பெருமை இந்த அரசுக்கும், அதை வழி நடத்திச் செல்கிற முதல்வர் புரட்சித் தலைவருக்கும் சாரும்.

பிற்பட்ட சமுதாயத்தை சேர்ந்தவர்கள் அமைச்சர்களாக, துணைவேந்தர்களாக, உயர்நீதி மன்ற நீதிபதிகளாக வர முடிகிறது.

அந்த ஒப்பற்ற நிலையை உருவாக்கிக் காட்டியவர் தந்தை பெரியார்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

பேச்சின் இறுதியில் அமைச்சர் காளிமுத்து ஒரு உறுதிமொழியை வாசித்தார்.

கூடியிருந்த ஆயிரக்கணக்கான மாணவ மாணவிகள் விண்ணதிர கரவொலி எழுப்பி, அந்த உறுதி மொழியை ஆமோதித்தனர்.

அந்த உறுதி மொழி வருமாறு: இந்நாட்டில், ஏன்? இப்பரந்த உலகில் இனம், மதம், மொழி, நிறம்என்ற அடிப்படையில் பேதமின்றி ஏற்றத் தாழ்வற்ற சமுதாயத்தை தந்தை பெரியார் வழிநின்று உருவாக்க நாங்கள் முழு மூச்சுடன்உழைத்திட உறுதி பூணுகிறோம்.

ஆர். ஜெகதீசன் நன்றி கூறினார்.

## கோயா பதவியேற்பு

திருவனந்தபுரம், அக்.5- இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தலைவர்களில் ஒருவரான முகமது கோயா நேற்று (புதன்கிழமை) மீண்டும் கேரள அமைச்சராக பதவி ஏற்றார்.

கேரள ஆளுநர் ஜோதி வெங்கடாசலம் பதவிப் பிரமாணம் செய்து வைத்தார். இந்நிகழ்ச்சியில் முதல்வர் ஏ. கே. அந்தோணி உள்ளிட்ட அமைச்சர்கள் உயர் அதிகாரிகளும் கலந்து கொண்டனர்.

*

## மெரிலாண்ட் சுப்ரமணியம் மறைவு

திருவனந்தபுரம், அக்.5- மலையாளத் திரைப்படத் துறையின் முன்னோடிகளில் ஒருவரும் மெரிலாண்ட் ஸ்டுடியோ அதிபரும், புகழ் பெற்ற படத்தயாரிப்பாளரும், டைரக்டருமான மெரிலாண்ட் சுப்பிர மணியம் காலமானார். அவருக்கு வயது 71.

கடந்த நான்கு மாதங்களாக நோய்வாய்ப்பட்டு இருந்த சுப்பிரமணியம் திருவனந்தபுரத்தில்அவரது இல்லத்தில் காலமானார்.

மெரிலாண்ட் சுப்பிரமணியம் நெல்லை மாவட்டம் செங்கோட்டையைச் சேர்ந்தவர். அவருக்கு மனைவியும், 5 மகன்களும், ஒருமகளும் உள்ளனர். இதுவரை அவர் தயாரித்துள்ள 70 படங்களில் மலையாளப் படங்கள் 61. 8 தமிழ்ப் படங்களும் ஒரு ஹிந்திப் படமும் தயாரித்துள்ளார். புரட்சித்தலைவர் நடித்த ராஜராஜன் எனும் படத்தைத் தயாரித்துள்ளார்.

திருவனந்தபுரம் மேயராக ஒரு வருடம் பதவி வகித்துள்ளார்.

அவருக்கு அனுதாபம் தெரிவித்து தென் இந்திய சினிமா வர்த்தக சபைத் தலைவர் சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தி அறிக்கை வெளியிட்டுள்ளார். சுப்ரமணியம் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் திரைப்பட வர்த்தக சபை நேற்று மூடப்பட்டது.

# கருணாநிதி மீண்டும் ஆட்சிக்கு வரவே முடியாது

## அரங்கநாயகம் பேச்சு

கோவை, அக் 5— முதல்வர் புரட்சித்தலைவர் ஆட்சிக்கு எதிராக மக்களை திரட்ட கருணாநிதியால் முடியவே முடியாது. அவர் மீண்டும் ஆட்சிக்கு வரவே முடியாது என்று கல்வியமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

கோவை டவுன் ஹாலில் நடந்த முப்பெரும் விழாவைத் தொடக்கி வைத்து அமைச்சர் அரங்கநாயகம் பேசியதாவது:

திமுக தலைவர் கருணாநிதி இப்போது திடீர் போராட்டங்களை அறிவிக்கிறார். தமிழ்நாட்டில் அரிசனங்களுக்கும்பிற்பட்டவர்களுக்கும் பாதுகாப்பு இல்லை என்கிறார். இது மக்களை ஏய்க்கும் தந்திரம். இந்த மக்களுக்கு இந்த ஆட்சியில் பாதுகாப்பு இருக்கிறது என்பதற்கு பல சான்றுகள் உள்ளன.

மக்களை சுரண்டி லாபமடைந்த கூட்டம் இன்று இருக்குமென்றால் அது திமுக தான் அதை மக்கள் இன்னும் மறக்கவில்லை.

நிலைமை இப்படியிருக்க புரட்சித்தலைவர் ஆட்சிக்கு எதிராக மக்களைத் திரட்ட கருணாநிதியால் இயலாது. மீண்டும் ஆட்சிக்கு வர இயலாது. விழுந்த அடி விழுந்ததுதான். திமுகவின் எதிர்காலம் அந்த அளவில் தான் இருக்கும்.

இவ்வாறு அரங்கநாயகம் பேசினார்.

செய்யது முகமது, சண்முகசுந்தரம், எஸ். அப்துல் காதர், அமானுல்லா, என் பெரியதம்பி ஆகியோரும் பேசினர்.

கோவை அண்ணுபாரம் தூக்கும் தொழிலாளர்கள் சார்பில் சாயிபாபாகாலனி மில்ரோடு, ஜெயில்ரோடு, முதலான இடங்களில் முப்பெரும்விழா கொண்டாடப்பட்டது. அமைச்சர் அரங்கநாயகம் கொடி யேற்றிப் பேசினர்.

சாயிபாபா காலனி, மில் ரோடு பகுதியில் 4 ஆயிரம் பேருக்கு இலவச சாப்பாடு வழங்கினர். பிரபாகரன் செய்யது முகமது, நிஜாம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

∴ கொலை நடந்ததும் கருணாநிதியோடு தி. மு. க. எம். எல். ஏ. அவசர ஆலோசனை

∴ நடிகை சிபாரிசில் சலுகை அளித்த ஆறுமுகம்

## கருணாநிதி ஆட்சி காலத்தில்

# திமுக எம்எல்ஏ வெறியாட்டம்

## பூலாவரிசுகுமாரன்கொலைவழக்கில் நெஞ்சம்பதைக்கும்சாட்சியங்கள்

கிருஷ்ணகிரி, அக். 5- கழக அடலேறு பூலாவரி சுகுமாரன் கொலை செய்யப்பட்ட வழக்கில் பரபரப்பான சாட்சியங்கள் கோர்ட்டில கூறப்பட்டுள்ளன. பூலாவரி பகுதியில் வீரபாண்டி ஆறுமுகம் வைத்ததுதான் சட்டம்என்றுகிராம அதிகாரி சாட்சியம் அளித்தார். கொலை முடிந்ததும் அப்போதைய முதல்வர் கருணாநிதிக்கு வீரபாண்டி ஆறுமுகம் அவசரம் அவசரமாக டெலிபோன் செய்து பேசினார் என்ற தகவலும் வழக்கு விசாரணையில் வெளியானது.

கழகத்தோழர் பூலாவரி சுகுமாரனும் அவர் தந்தையும் துப்பாக்கியால் சுட்டு கோரமாகக் கொலை செய்யப் பட்டதும் கருணாநிதி ஆட்சி காலத்தில் இந்தக் கொலை மூடி மறைக்கப் பட்டதும் தெரிந்ததே.

இந்த வழக்கு விசாரனை இப்போது கிருஷ்ணகிரி கோர்ட்டில் நடந்து வருகிறது.

இந்த வழக்கில் முன்னாள் தி. மு. க. எம். எல். ஏ. யும், தற்போதைய தி. மு. க. எம். எல். சி. யுமான வீரபாண்டி ஆறுமுகமும் மற்றும் சிலரும் சேர்க்கப் பட்டுள்ளனர்.

வீரபாண்டி ஆறுமுகம் முதல் குற்றவாளியாக சேர்க்கப்பட்டுள்ளார்.

வழக்கு விசாரணையில் சேலம் டெலிபோன் இன்ஸ்பெக்டர் ஜானகிராமன், டெலிபோன் இலாகாவின் ரிக்கார்டுகளை ஆதாரமாக வைத்து சாட்சியம் அளித்தார். அவர் கூறியதாவது:

கொலை நடந்த அன்று ஆறுமுகம் சேலத்திலிருந்து சென்னைக்கு மின்னல் வேக டெலிபோன் கால்போட்டு கருணாநிதியின் செயலாளர் நாகராஜனின் தனி டெலிபோன் நம்பருடன் தொடர்பு கொண்டு பேசி இருக்கிறார். அதன் பிறகு நாகராஜனின் அலுவலக டெலிபோனுக்கும் தொடர்பு கொண்டு பேசி இருக்கிறார்.

கருணாநிதியின் உதவியாளராக இருந்த கருப்பண்ணனுடைய அலுவலகத்துக்கும் தொலைபேசியில் தொடர்பு கொண்டு பேசி இருக்கிறார்.

அதன் பிறகு கருணாநிதியின் நம்பருக்கு போன் செய்துள்ளார். கருணாநிதி வீட்டு போனுக்கு 3தடவை கால் போட்டு பேசி இருக்கிறார் 3 காலில் 2 டெலிபோன் கால்கள் குறிப்பிட்ட நபருடன் மட்டுமே பேசுவதற்கான பி. பி. கால் ஆகும்.

(அதாவது கருணாநிதியுடன் மட்டுமே பேசியதற்கான 'கால்'கள் அவை)

கொலை நடந்த அன்று டெலிபோன் செய்தற்கான பில் ரூ. 392.

இவ்வாறு ஜானகிராமன் கூறினார்.

### கிராம அதிகாரி

பூலாவரிகிராம அதிகாரி ராஜகோபால அய்யங்கார் கோர்ட்டில் கூறியதாவது:

பூலாவரியை சுற்றியுள்ள 30 கிராமங்களுக்கு இந்த வழக்கின் முதல் எதிரியான ஆறுமுகம் வைத்ததுதான் சட்டம். அதனால் நான் பயந்து கொண்டு சேலத்தில் குடி இருக்கிறேன்.

கொலை பற்றி தகவல் கிடைத்ததும்பூலாவரிக்குப் போனேன். சுகுமாரனின் தாய் பாப்பு அம்மாளைவிசாரித்தேன். அப்போது ஆறுமுகம் குறுக்கிட்டு என்னை தடுத்தார்.பாப்புஅம்மாளையும் ஆறுமுகம் மிரட்டினார்.

இவ்வாறு ராஜகோபால அய்யங்கார் கூறினார்.

### நடிகையின் தம்பி

நடிகை ராஜ்கோகிலாவின் தம்பி வசந்தகுமார் சாட்சியம் அளிக்கையில் கூறியதாவது:

இப்போது நான்சென்னையில் ஒரு சினிமா கம்பெனியில் வேலை பார்த்து வருகிறேன்.

இதற்கு முன்பு சேலம் மத்திய கூட்டுறவு பாங்கில் கேஷியராக வேலை பார்த்தேன்.

என்னுடைய அக்கா ராஜ்கோகிலாவின் சிபாரிசின்பேரில் தான் எனக்கு பாங்கில் கேஷியர் வேலை கிடைத்தது.

என்னுடைய அக்கா ராஜ்கோகிலாவுக்கு வீரபாண்டி ஆறுமுகத்தை மிகவும் நன்றாகத்தெரியும். என்னுடைய அக்கா ராஜ்கோகிலாவை பார்க்க சென்னையில் உள்ள எங்கள் வீட்டிற்கு ஆறுமுகம் அடிக்கடி வருவார். சேலம் பொருட்காட்சியில் நாடகம் நடத்த என் அக்கா வந்தபோது இருவரும் முதல் தடவையாக சந்தித்துக் கொண்டார்கள்.

இவ்வாறு ராஜ்கோகிலாவின் தம்பி வசந்தகுமார் கூறினார்.

### ராணிஆறுமுகம் உறவினர்

மறைந்த சென்னை அழகி ராணி ஆறுமுகத்தின் தங்கையின் கணவர் பாலசுப்பிரமணியம் சாட்சியம் அளிக்கையில்கூறியதாவது:

என் மனைவியின் பெயர் ராஜேஸ்வரி. சென்னை அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ராணி ஆறுமுகத்தின் தங்கைதான் என் மனைவி ராணி ஆறுமுகத்தின்சிபாரிசின்பேரில் சேலம் மாவட்டம் தேவண்ண கவுண்டனூரில் உள்ள ஒரு கூட்டுறவு கிளை பாங்கில் எனக்கு வீரபாண்டி ஆறுமுகம் வேலை போட்டுக் கொடுத்தார்.

இவ்வாறு பாலசுப்பிரமணியம் சாட்சியம் அளித்தார்.

### அருள்

முன்னாள் போலீஸ் ஐ. ஜி. அருள் சாட்சியமளிக்கையில் கூறியதாவது:

இந்த இரட்டைக் கொலை வழக்கில் சுமுகமாக விசாரணை நடத்தவிடாமல் அரசியல் இடைஞ்சல்கள் இருப்பதாக எனக்குபுகார்வந்தது.

சேலம் மாவட்ட போலீஸ் சூப்பிரண்டு ரமணனை கருணாநிதி அழைத்துப்பேசினார். வழக்கிலிருந்து ஆறுமுகத்தின் தம்பி குப்புசாமியை விட்டு விடும்படி ரமணனிடம் கருணாநிதி கூறியிருக்கிறார். இது அவ்வளவு எளிதான காரியமல்ல என்று கருணாநிதியிடம் சொல்லி விட்டதாக ரமணன் என்னிடம் கூறினார்.

ரமணனுக்கு நான் ஆதரவு தெரிவித்தேன்.வழக்கு விசாரணையை தொடர்ந்து நடத்தும்படி கூறினேன்.

பிறகு கருணாநிதி என்னிடம் பேசிக் கொண்டு இருந்த போது சுகுமாரன் கொலைவழக்கில் குப்புசாமியை விடுவிக்க வழி இருக்கிறதா என்று என்னிடம் கேட்டார்.

அப்படிச்செய்யமுடியாது என்று நான்கூறிவிட்டேன்.

இவ்வாறு அருள் கூறினார்.

பூலாவரி சுகுமாரன் அவருடைய தந்தை பழனியப்பன் ஆகியோர் கொலை செய்யப் பட்ட வழக்கில் இதுவரை 56 சாட்சிகள் விசாரிக்கப் பட்டுள்ளனர்.



## ஏஜெண்டுகள் கவனத்திற்கு

1978 செப்டம்பர் மாத பட்டியல் எல்லா ஏஜெண்டுகளுக்கும் அனுப்பப்பட்டு விட்டது. எனவே, பட்டியல் தொகையையும், பாக்கித் தொகையையும் அலுவலகத்திறகு 10-10-78க்குள் கிடைத்து விடுமாறு அனுப்பி வைக்க வேண்டும். தவறினால் கண்டிப்பாக ஏஜென்ஸி உரிமை ரத்து செய்யப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

விநியோக நிர்வாகி,
"அண்ணா" நாளிதழ்

# கலைத்துறையில் கட்டுப்பாடு தேவை டைரக்டர் கே. எம். பாலகிருஷ்ணன்

இது வரையில் தமிழ்ப் படங்கள் இவ்வளவு அதிகமாக வெளிவந்தது இல்லை என்று சொல்லும்வகையில் கடந்த ஒரு மாதமாக பல படங்கள்தொடர்ந்துவெளிவருகின்றன.

தமிழ்த்திரை உலகில் இனிமேல் படங்களைத்தயாரிக்க முடியுமா எடுத்து முடித்து வெளியிட முடியுமா என்ற சூழ்நிலை கடந்த ஓராண்டுக்கு முன்பு வரை இருந்து வந்தது. இப்போது உள்ள நல்ல சூழ்நிலைக்கு தமிழக அரசும் முதலமைச்சர் புரட்சித் தலைவரும் தான் காரணம் என்பதை நன்றியுணர்வோடு கலைத் துறையினர் ஒவ்வொருவரும் உணர்கின்றனர்.

இப்போதைய நல்ல சூழ்நிலையின் காரணமாக அவசர அவசரமாக பல படங்களுக்கு பூஜை போடப்படுகின்றன. அதைவிட அவசரமாக இரண்டு நாட்களுக்கு ஒரு படம் வீதம் வெளிவந்து கொண்டிருக்கிறது. இப்படிப்படங்கள் அதிகமாக வெளிவருவதன் காரணமாக தமிழ்ப்படங்களுக்கு தியேட்டர்கள் கிடைக்காமல் மாட்னி காட்சி மட்டும் சில படங்களுக்கு நடத்தக்கூடிய நிலைமை இருந்துவருகிறது.

இந்தியாவிலேயே தமிழகத்தில்தான் தியேட்டர்கள் அதிகம். என்றாலும் இப்போதைய நிலையில் இன்னும் அதிகமான தியேட்டர்கள் கட்டப்பட வேண்டும்.

மற்றொன்று வெளி மாநிலங்களில் தமிழ்ப்படங்கள் பகல் காட்சியாக மட்டும் காட்டப்படுகின்றன. ஆனால் தமிழகத்தின் தலைநகரான சென்னையில் தமிழ்ப் படங்களேமேட்னி காட்சியாக நடத்தவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. குறிப்பிட்ட சில திரை அரங்குகளில் இந்தி மற்றும் இதரமொழிப்படங்கள் ஆண்டுக்கணக்கில் தொடர்ந்து ஓட்டப்படுகின்றன. இந்த நிலையில் மாறுதல் செய்ய வேண்டும். ஒவ்வொரு திரை அரங்கும் ஒரு ஆண்டுக்கு குறைந்தபட்சம் 9 மாதங்களுக்காவது தமிழ்ப் படங்களையே ஓட்டித் தீரவேண்டும்என்ற நிலைமையினை உருவாக்க வேண்டும். அப்படிச் செய்யப்பட்டால் தமிழ்ப் படங்களுக்குதியேட்டாகிடைக்கவில்லை என்று கூறக் கூடிய சூழ்நிலை ஓரளவு குறையும்.

அதோடு திரைப்படங்களை இந்த அளவுக்கு போட்டி போட்டுக் கொண்டு வாரத்திற்கு 5,6 படங்கள் வீதம் வெளியிடுவதால் ஓரளவு ஓடக்கூடிய படங்கள் கூட வெகு விரைவில் திரையரங்கை விட்டு ஓடிவிடுகின்றன.

தமிழக அரசினுல் ஏற்பட்ட நல்ல சூழ்நிலையை நாமே கெடுத்துக் கொள்ளக் கூடிய அளவுக்கு போட்டியிடும் தன்மை பெருகுகின்றது. கலைத் துறையினருக்குள் ஒரு கட்டுப்பாடு இருந்தால் எல்லோருக்குப் நல்லது. வாரத்துக்கு ஒரு படம் என்ற அளவுக்காவது நமக்குள் ஒரு ஒழுங்கை ஏற்படுத்திக் கொண்டு வெளியிடுவது நல்லது.

இது குறித்து பெரியவர்கள், தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபையினர் ஆலோசனை செய்து முடிவு செய்ய வேண்டும்.

இவ்வாறு டைரக்டர் கே. எம். பாலகிருஷ்ணன் கூறினர்.

## அண்ணு



'ஜம்பு' படத்தில் புலியிடம் சிக்கிய மான்-ஜெயமாலா.

## 'தெய்வதரிசனம்' துவக்கவிழா

கே. ஆர். விஜயா கதாநாயகியாக நடிக்கும் ஸ்ரீகருமாரிகிரியேஷன்ஸ் தயாரிக்கும் 'தெய்வதரிசனம்' வண்ணப் படத்தின் துவக்க விழாவும் பாடல் ஒலிப்பதிவும் ஏவி. எம். கலைக்கூடத்தில் நடைபெற்றது.

கே. ஆர். விஜயா குத்துவிளக்கு ஏற்ற திருவேற்காடு ராமதாஸ் சுவாமிகள் நேரில் வந்து ஆசிகூற விழா துவங்கிற்று.

தென்னிந்திய வர்த்தக சபைத் தலைவர் சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தி மற்றும்பட உலகப் பிரமுகர்கள் பலர் விழாவுக்கு வந்திருந்தனர்.

கவிஞர் ஈரோடு ஆற்றலரசு எழுதிய

மங்கலமேவழங்கிடுவாள் கருமாரி

அருள் மழையெனவே நலம்தருவாள் உருமாறி!

எனத்துவங்கும் பாடலுக்கு ஜெயசேகர் இசையமைக்க எஸ். ஜானகி பாட ஒலிப்பதிவு செய்யப்பட்டது.

இசையமைப்பாளர் ஜெயசேகர் இசையமைக்கும் முதல் படம் இது. இசைக் குழுவில் கிடாரிஸ்டாக பணிபுரிந்தாலும் சங்கீதத்தில் நல்ல ஞானம் பெற்று தனியாக இசையமைக்கும் அளவு திறமை பெற்றவர் இவர்.

இப்படத்தில் கே. ஆர். விஜயா, ஸ்ரீகாநத், மேஜர் சுந்தரராஜன் ஆகியோர் நடிக்கிறார்கள். புதுமுகம் ராஜேஷ் நடிக்கிறா.

வெற்றிச்செல்வன் கதை, வசனம் எழுதியுள்ளார். திருச்சி ஜி. கே. நாகராஜ் என்னும் புதிய பாடலாசிரியர் இப்படத்தின் மூலம் அறிமுகமாகிறார்.

முதல் முதலாக இப்படத்தை ஆர். தியாகராஜன் இயக்கவிருக்கிறார்.

## ருத்ர தாண்டவம்

நாடகமாக நடிக்கப்பட்டு, பல்லாயிரம் ரசிகர்களைக் குலுங்கக் குலுங்க சிரிக்க வைத்த கதை திரைப்படமாகியுள்ளது.

இந்தக் கதைக்கு ஆதாரமே சிவனும் அந்தவேடத்தில் தோன்றும் வி. கே. ராமசாமியின் அனுயாசமான நடிப்பும், உரையாடல்களும்தான்!

நாடகத்தில் ரசித்த அளவுக்கு முழுமையாகப் படத்தில் இல்லாததற்கு காரணம்?

திரைப்படம் என்றதும்- இளம்ஜோடிகள் காதல்... டூயட்... மற்றும்பலகலவைகள்புதிதாகசேர்க்கப்பட்டுள்ளன.

இதனுல் முழுமையாக இருந்த சிவன் கதாபாத்திரத்துக்குள்ள முக்கியத்துவம் குறைக்கப்பட்டுள்ளது.

சினிமாவுக்காக செய்யப்பட்ட மாற்றங்களில் சில சுவையைக் கூட்டிஉள்ளன. மற்றவை?

படத்தில் வி. கே. ஆர். வந்தவுடன் தான் கலகலப்பு...வெடிச் சிரிப்பு... விறுவிறுப்பு வருகிறது.

'சிவனே'ன்னு நம்மை ரசித்துக்கொண்டே இருக்கும்படி வைதது விடுகிறார் வி. கே. ஆர்.

தேங்காய் சீனிவாசன், சுருளிராஜன் பிச்சைக்காரர் ஒழிப்பு, தேர்தல் தோல்வி நகைச்சுவை குலுங்கக் குலுங்க சிரிக்க வைக்கிறது.

அர்ச்சகர் வேடத்தில் நாகேஷ் அருமையாக நடித்திருக்கிறார். சில காட்சிகளில் தனது உருக்கமான நடிப்பினுல் நமது கண்களை பனிக்கச் செய்துவிடுகிறார்.

விஜயகுமார், சுமித்ரா ஜோடி அழகாக வந்து பொருத்தமாக நடித்துள்ளது. வாசுவின் ஆர்ப்பாட்டம் ராதாரவியின் வில்லன் நடிப்பு நன்கு உள்ளது.

ராஜாபகதூர், சி. எஸ். பாண்டியன் லாவண்யா ஆகியோர் நன்ருக நடித்துள்ளனர்.

ரமணி, மனோரமா ஆகியோரின் பண்பட்ட நடிப்பு நம்மைக் கவர்கிறது. ஏ. வீரப்பன் கதை, வசனம் பாராட்டும்படி உள்ளது. ஒருமைப்பாட்டுக்கு மசால்வடையை உதாரணமாகக் கூறுவதும்...

''உண்மையாக உழைக்கின்றவனும்உள்ளன்போடு பக்தி செலுத்துபவனும் சிரமப்படுகின்றான். ஊரை ஏய்க்கின்றவன் ஊர் மெச்ச வசதியோடு வாழ்கின்றான்'' என்று கொதிப்போடு அர்ச்சகர் கூறும் வார்த்தைகளும், நகைச்சுவை உரையாடல்களும் கருத்தாழத்துடன் இந்தப் படத்திற்கு முதுகெலும்பாக இருக்கின்றது. ஜி. ஆர். நாதன் ஒளிப்பதிவு சிறப்பாக உள்ளது.

விஸ்வநாதன் இசையமைப்பில் ஒரு பாடல் இனிமையாக உள்ளது.

''நீ நல்லவனு கெட்டவனு?

சொல்லிவிடும் இறப்பு''

என்ற வாலியின் பாடலும், அண்ணுவின் இறுதி ஊர்வலத்தை இணைத்துக் காட்டி இருப்பதும் பொருத்தமாக உள்ளது.

விஜயன் விறுவிறுப்பாக இயக்கியுள்ளார்.

மொத்தத்தில்

சிரிப்பு விருந்து

## எக்ஸ்ரே

## *இறைவன் கொடுத்த வரம்





அண்ணன், தனது தங்கைக்குப் பெரிய இடத்தில் திருமணம் செய்துவைக்க வேண்டுமென்று விரும்புகிருன். திருமணநாளன்று மணமகனைபெரியமோசடிக்காரனென்று கூறி போலீசார் கைதுசெய்து செல்கின்றனர்.

தங்கைக்கு மறுவாழ்வு தரவேண்டுமென்று அண்ணன் துடிக்கிருன். அவள் மீண்டும் ஒருவனை மணந்து கொள்கிருள்- முதலிரவன்று அவனும் ஒரு விபத்தில் மாண்டுவிடுகிருன். இருவருக்குமனைவியான போதிலும் அவள் கன்னி கழியாமலே இருக்கிருள். முதலில் தாலி கட்டியவன் திருந்தி, அவளுக்கு வாழ்வுதர வருகிருன். அவளுடைய அத்தை மகன் ஒருவன் தான் மணந்து கொள்ளுகிறேன் என்று வருகிருன். இந்தப் போட்டியைப் பார்த்து அவள் அதிர்ச்சி அடைகிருள்.

நல்லவேளையாக அவள் செத்துத் தொலைகிருள். இல்லாவிட்டால் இன்னும் இரண்டு பேர் நாங்கள் கட்டிக்கொள்கிறோம்என்று வந்திருப்பார்கள்.) இது தான் இறைவன் கொடுத்த வரம்!

கதையின் ஒருபகுதிகதை நாயகியின் மீது அனுதாபத்தை ஏற்படுத்துகிறது. மறுபகுதி?

## நாலுகத்திருமன்

சுமித்ரா அழகாக வருகிறார். அருமையாக நடித்திருக்கிறார். அத்தையிடம் வாதிடும்போதும், பித்துப் பிடித்தவர் போல் சிரிக்கும்போதும், ஸ்ரீகாந்த் அணைப்பில் நாணத்தோடு தவிக்கும்போதும் முதல் - கணவன் கைதாவதையும்,

இரண்டாவதுகணவன்மரணமடைந்ததைக் கேட்டு அதிர்ச்சி அடையும்போதும் சிறப்பாக நடித்திருக்கிறார்.

தங்கைக்காக வாழும் பாசமுள்ள அண்ணனுக விஜயகுமார் அழகாக அழுத்தமாக, அமைதியாக நடித்திருக்கிறார்.

துவக்கத்தில் ஆர்ப்பாட்டமும், ஸ்டைலும்துள்ளலுமாக வருகிற ரஜனிகாந்த் பிற்பகுதியில் அமைதியாக நன்கு நடித்திருக்கிறார்.

சோ, படாபட் ஜெயலெட்சுமி, லட்சுமிஸ்ரீ, எம். பானுமதி, ஆகியோர் குறையின்றிநடித்திருக்கின்றனர்.

ஆர். பாலகிருஷ்ணன் கதை வசனம் எழுதியுள்ளார். உரையாடல் பல இடங்களில் எடுப்பாக உள்ளது. அழகாக முடிக்க வேண்டிய கதையைத் தேவையில்லாமல் இழுத்துச் சென்றிருப்பதைத் தவிர்த்திருக்கலாம்.

ஸ்ரீகாந்த் தனது குணச்சித்திர நடிப்பால் நம்மை ஈர்க்கிறார்.

விஸ்வநாதன் இசையமைத்துள்ளார்.

பீம்சிங் டைரக்ட் செய்திருக்கிறார்.

## *எல்லையம்மன்

ஆண்டவன் அருகில்இருந்தாலும் 'தான்' எனும் அகந்தை கூடாது என்ற கருத்தோடு துவங்குகிறது ஜமதக்னி, ரேணுகாதேவி, பரசுராமர் ஆகியோர் கதாபாத்திரங்களாக அமைந்த இந்தப் புராணக் கதை.

சரோஜாதேவி ரேணுகாதேவியாக நன்குநடித்திருக்கிறார். ஸ்ரீநாத் பரசுராமராக சிறப்பாக நடித்திருக்கிறார்! ஜெயமாலினி, ஆலம், வெண்ணிற ஆடை நிர்மலா, பவானி, மஞ்சுளா, ராஜேஷ், உதய குமார், ராம்கோபால், துவாரகேஷ் ஆகியோர் நடித்திருக்கின்றனர்.

தேவநாராயணன் வசனம் பாடல்களை எழுதி உள்ளார். எம். ரங்காராவ் இசை அமைத்துள்ளார்.

தந்திரக்காட்சிகளும், பிரம்மாண்டமான அரங்க அமைப்புகளும் சிறப்பாக உள்ளன.

சி. எஸ். ராவ் டைரக்ட் செய்துள்ளார்.

பெண்களை, பக்தர்களைக் கவரும் படம்.

## கலை விருந்து

'பரமபதம்' படத்தில் விஜயகீதா

## தமிழ்த் திரை உலகின் புதிய இரட்டை இயக்குநர்கள்

'ஜெய்மாருதி' படநிறுவனத்தினர் 'வடை மாலை' என்னும் பெயரில் ஒரு புதிய வண்ணப் படத்தினை தயாரிக்கின்றனர். இப்படத்தின் துவக்க விழா பிரசாத் படப்பிடிப்பு நிலையத்தில் பாடல் பதிவுடன் நடநதது. அன்று கவிஞர் வாலி எழுதி, பாலமுரளி கிருஷ்ணா பாடிய

'கேட்டேன் கண்ணனின் கீதோபதேசம்-அதில் கண்டேன் மாதவன் கருணை விலாசம்''

என்ற இப்பாடல் எம்.எஸ். விஸ்வநாதன் இசையில் பதிவாக்கப்பட்டது.

துவக்க விழாவிற்கு தயாரிப்பாளர்கள் யோகசித்ரா ஜி.கே. தர்மராஜன் ஏ.வி.எம்.முருகன், குமரன், 'சித்ர மகால்' கிருஷ்ணமூர்த்தி. கே. ஆர். ஜி. இயக்குநர்கள் எஸ். பி. முத்துராமன், டி. என், பாலு, கிருஷ்ணன்- பஞ்சு, பாலமுருகன் பி. ஆர். சோமு, ஏ. ஜகந்நாதன், குகநாதன், நடிகர்கள் எஸ். வி. சுப்பையா, ஸ்ரீகாந்த், மனோரமா, மற்றும் திரைஉலகப் பிரமுகர்கள் பலர் வந்திருந்தனர். வந்தவர்களை தயாரிப்பு நிர்வாகி என். சையது ஒருவிரல் கிருஷ்ணராவ், பி. ஆர். ஓ. மணி ஆகியோர் வரவேற்றனர்.

ஒளிப்பதிவை மாருதி ராவ் கவனிக்க கே. சங்கர் எடிட் செய்ய கதைவசனம் பாடல்களை கவிஞர் வாலி எழுதுகிறார்.

எஸ்.எம்.ஆர். ஜெயந்தி தயாரிக்கும் இப்படத்தை மாருதிராவ் வாலி இருவரும் சேர்ந்து மாருதி வாலி என்ற பெயரில் இயக்குகிறார்கள்.

'ராமஜெயா' படத்துவக்க விழாவில் டைரக்டர் வி.சீனிவாசன் 'அண்ணு' செய்தி ஆசிரியர் கார்க்கி, அமைச்சர் காளிமுத்து, தேங்காய் சீனிவாசன், ஜேப்பியார், ஸ்ரீகாந்த்.

## கண்ணதாசன் நடிக்காதது ஏன்?

ஜெனரல் சக்கரவர்த்தி 105வது நாள்விழாசென்னை உட்லண்ட்ஸ் ஓட்டலில் நடைபெற்றது.

விழாவில் கலந்து கொண்ட அரசவைக் கவிஞர் கண்ணதாசன் பேசும்போது வேடிக்கையாக...

''நான் கொஞ்சகாலம் நடித்துக் கொண்டிருந்தேன். அப்போது என்னுடன் கே. ஆர். விஜயா நடித்தார். நான் நடிப்பதை நிறுத்தியது சிவாஜி கணேசனுக்கு மார்க்கெட் போய்விடக் கூடாதே என்று தான்'' என்று கவிஞர் கண்ணதாசன் கூறியதும் பலத்த சிரிப்பு எழுந்தது.

அருகில் இருந்த சிவாஜி கணேசன், ''நான் கவிதை எழுதாமல் இருப்பது கவிஞருக்கு மார்க்கெட் போய் விடக் கூடாது என்பதால் தான்'' என்று வேடிக்கையாகக் கூற சிரிப்பொலியும் ஆரவாரமும் எழுந்தன.

சின்ன அண்ணுமலை வரவேற்ருர். ராமானுஜம், புலவர் கீரன் ஆகியோர் உரையாற்றினுர்கள்.

சிவாஜிகணேசன் கதர் ஆடை அணிவித்து, கேடயங்களை கலைஞர்களுக்கு வழங்கினர்.

கே. ஆர். விஜயா, மனோரமா மோகன், டைரக்டர் யோகானந்த், விஸ்வநாத் ராய், டி. எம். சவுந்தரராஜன், வாணிஜெயராம், எல். ஆர். ஈஸ்வரி, சோப்ரா ஆர். விட்டல், கவிஞர் கண்ணதாசன், ஈஸ்வர், எலிகண்ட் கமலநாதன், மற்றும் பலருக்கும் கேடயம் வழங்கப்பட்டது.

ஜெனரல் சக்ரவர்த்தியாக நடித்த சிவாஜிகணேசனுக்கு ஜெனரல் ராஜா கேடயத்தை வழங்கினர்.

## BLAZING MAGNUM

(ஆங்கிலம்)

ஒரு போலீஸ் அதிகாரியின் தங்கை கொலை செய்யப்படுகிருள். கொலையாளி யார் என்பதைக் கண்டு பிடிக்க அண்ணன் துப்பறிகிருன். போலீஸ் இலாகாவே வலைபோட்டுத்தேடுகிறது. அடுத்தடுத்து பலர் கொலை செய்யப்படுகின்றனர். கொலையாளி யார் என்பது மர்மமாக இருக்கிறது. அந்த மர்மம் முடிவில் தெரிகிறது.

திகிலூட்டும் வகையில் விறுவிறுப்பாக படம் செல்கிறது. இந்தப் படத்தில் கார் ''சேசிங்'' பிரமாதமாக படமாக்கப்பட்டுள்ளது. கார்கள் ஒன்றை ஒன்று துரத்திச் செல்வது, மோதிக் கொள்வது, ரயிலுக்கு மேலே பறந்து செல்வது, தலை கீழாக கவிழ்ந்து அப்படியே சிறிது தூரம் செல்வது ஆகியவை இதுவரையில் இந்த அளவிற்கு எந்தப் படத்திலும் வெளிவரவில்லை என்று கூறலாம்.

பிலிம் பைனன்ஸ் கார்ப்பரேஷன் வெளியிட்டுள்ள இந்தப் படம் அபிராமி திரை அரங்கில் நடக்கிறது.

பார்க்க வேண்டிய சஸ்பென்ஸ் படம்.

# சங்கீதா விபத்தில்சிக்கினுர்

சாந்திநிகதனின் 'முழு நிலவு' படத்திற்கான வெளிப்புறப் படப்பிடிப்பு சென்னையை அடுத்துள்ள கும்மிடிப்பூண்டி ரயில் நிலையத்தில் நடந்தது. இந்தப் படத்திற்காக தனி ரயிலையேவாடகைக்கு அமர்த்தியிருந்தார்கள். இதற்கான விசேட ஏற்பாடுகளை ரயில் நிலைய அதிகாரிகள் செய்து கொடுத்தார்கள்.

திடீர் விபத்து ஒன்றில் தன் கணவனைப் பிரிந்த சங்கீதாவை எஸ். வி. சுப்பையா காப்பாற்றுகிருர். மீண்டும் தன் கணவனைத் தேடிக்கொண்டு சொந்த ஊருக்குப் போவதற்காக ரயில் ஏறுகிருர் சங்கீதா சுப்பையாவுடன்.

இதே நேரம் மனைவியை தேடிக்கொண்டு தன் கைக் குழந்தையோடு சொந்த ஊரைவிட்டுப் புறப்பட்டு அதே ரயில் நிலையத்தில் வந்து இறங்குகிறுன் சங்கீதாவின் கணவன். ஆனுல் அவர்கள் ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்ளாமலேயே தங்கள் பிரயாணத்தைத் தொடர்கிருர்கள்.

கதையின் மிக முக்கிய திருப்பு முனையாக அமைந்துள்ள இந்தக் காட்சியை கதையின் பின்னணிகெட்டு விடாமல் இருப்பதற்காக தனிரயிலை தயாரிப்பாளர்கள் வாடகைக்கு அமர்த்தினுர்கள். கும்மிடிப்பூண்டி ரயில் நிலையத்தையும் அதன் இயற்கை வனப்பு மிகுந்த அருமையான காட்சிகளையும் மிகச் சிறப்பாகப் படமாக்கியுள்ளார் ஒளிப்பதிவாளர் கே. எஸ். ராவ்.

இயக்குனர் உடுமலைச் சந்திரன் இயக்குவதோடு இதன் கதைவசனத்தையும் எழுதியுள்ளார்.

சங்கீதாவின் கணவராக புதுமுகம் விஜயபாஸ்கர் நடித்தார். சங்கர் கணேஷ் இசையமைக்கின்றனர். ஜி. தன்சிங், ஜி. ஜெயசிங் தயாரிக்கின்றனர்.

## இதோ ஒரு காதல் கதை

கலைமகள் கம்பைன்சா 'இதோ ஒரு காதல் கதை'என்றபெயரில் படம் ஒன்றைத் தயாரிக்கின்றனர்.

கமலஹாசன், ஸ்ரீபிரியா, மனோகர், சுருளிராஜன், வி. எஸ். ராகவன், ஜஸ்டின், ரீனு, ஜெயதேவ் பிரவிணு, பண்டரிபாய், சச்சு ஆகியோர் நடிக்கின்றனர்.

நாராயணசாமி எழுதிய கதைக்கு சுந்தர்ராஜன் திரைக்கதையும், ஏ. கே. புகழ்மணி வசனமும் எழுதுகின்றனா.

கவிஞர் கண்ணதாசன், கவிஞா நா. காமராசன் குடந்தை மாதவி நாதன் ஆகியோர் பாடல்களுக்கு குன்னக்குடி வைத்தியநாதன் இசையமைக்கிறார். செல்வராஜ் ஒளிப்பதிவு செய்கிறார்.

டி. பாபு தயாரிக்கும் இந்தப் படத்தை ஏ.ஜெகந்நாதன் டைரக்ட் செய்கிறார்.

## ஜெயசித்ரா நடிக்கும் திருவண்ணுமலை தீபம்

ராஜேஷ் மூவிசார் தயாரிக்கும் பாலமுருகனின் 'திருவண்ணுமலை தீபம்' வண்ணப் படத்தின் அரம்ப விழா சத்யா படப்பிடிப்பு நிலையத்தில் நடந்தது.

புலவர் சிதம்பரசாமிநாதன் தலைமையில் ஒய். ஜி. பார்த்தசாரதி விளக்கேற்றி வைத்தார். தயாரிப்பாளர் வேலுமணி படத்தின் கதைப் புத்தகத்தை கதை, வசன கர்த்தா டைரக்டர் கலைமாமணி பாலமுருகனிடம் தந்தார். சத்யாஸ்டுடியோ நிர்வாகிகளில் ஒருவரான சந்திரன் காமிராவை முடுக்கி படப்பிடிப்பை துவக்கி வைத்தார்.

கவிஞர் மதுரை பச்சையப்பன், இயக்குநர் பாலமுருகனுக்கு வாழ்த்துக் கவிதை படித்தளிக்க தொடர்ந்து கவிஞர் முத்துலிங்கம், கவியரசு கண்ணதாசன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

விழாவிற்கு நடிகர்கள் ஏவி. எம். ராஜன், புஷ்பலதா, ஸ்ரீகாந்த, சுமித்ரா, வி. எஸ் ராகவன், மஞ்சுளா, ஒய். ஜி. மகேந்திரன் மற்றும் சிவகாமி, ஏராளமான கலையுலகப் பிரமுகர்களும் வந்திருநதனர்.

டைரக்டா, தயாரிப்பாளர் குகநாதன், எஸ். ஆர். தசரதன், தயாரிப்பாளர் குற்றாலிங்கம், துரைக் கிருஷ்ணன், ஜேப்பியார் ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டனர்.

நடிகர் விஜயகுமார் ஜெயசித்ரா, மனோரமா கலந்துகொண்ட காட்சிகளை இயக்குநர் பாலமுருகன் இயக்க கேமிராமேன் ஆர். என். கே. பிரசாத் படமாக்கினுர்.

''மாம்பழத்து வண்டு'' என்று சதிஸ்ரீயிடம் உறவாடும் ஜெய்கணேஷ் 'இரவுகள் எனக்காக' என்று தீபாவிடம் கூறுகிருரோ?

புதிய இரட்டை இயக்குநர்கள் கவிஞர் வாலி, மாருதி ராவுடன் பட அதிபர் ஜி.கே. தர்மராஜ்